உ

கடவுள் துணை.

---

# பஞ்சதந்திரக்கதை.



இவை

சென்னைக்கல்விச்சங்கத்துத்

தமிழ்த் தலைமைப்புலமை நடாத்திய

ம-ள-ள-ஸ்ரீ

தாண்டவராயமுதலியாரால்

மொழிபெயர்த்தெழுகப்பட்டு

தக்கோலம்

இராமசாமிநாயுடு

அவர்களால் தமது

ஸ்ரீலட்சுமிநாராயணவிலாச அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

1907.

# திருப்புகழ்.

## நூறுபாடல்களுக்கு மூலமும்-உரையும்

"திருப்புகழ்"—என்பது திருவண்ணா மலையில் எழுந்தருளி யிருக்கின்ற ஸ்ரீ அருணகிரிநாதரால் மிகவும் கஷ்டமான சந்தங்களோடு செய்யப்பட்ட நூல் அவ்வொரு நூலைப்படிப்பவர்கள் பெரும் புலவரையும் (முருகக்கடவுள் திருவருளால்மதிப்பதில்லை) என்று அந்நூலே புகல்கின்றது, அந்தத் தீர்மானத்தைக்கொண்டே" திருப்புகழை" எல்லாப் பிள்ளைகளுக்கும் கற்றுக்கொடுத்தல் வழக்கமாக வந்துகொண்டிருக்கிறது, ஆயினும் செய்யுள்களைமாத்திரம் படித்துவிடக் கூறுகின்றதேயொழிய பொருள் விளங்குகின்றதில்லை. இந்தக் குறையை நிவர்த்திக்க இப்போது அதற்குத் தகுந்த மாதிரியான பதவுரைகள் எழுதி நல்லகடிதத்தில் ராயல் 16-பேஜியில் அச்சிட்டிருக்கிறது. இந்த ஒரு நூலை நன்றாய் வாசிக்கின்றவர்களுக்கு சகல சாஸ்திர ஆராய்ச்சியையும்செய்த பலனுண்டாகும் என்பதில் தடையில்லை.

இதன் விலை அணா-12.

# ஸ்ரீமகா பக்தவிஜயம்.

## இரண்டாம்பாகம்.

இதனால் சகலமான கனவான்களுக்கும் சித்திசுத்திபெறும் பக்தியிற் சிறந்த பாகவதோத்தமர்களுக்கும்மற்றுமுள்ள முதியோர்களுக்குந்தெரியப்படுத்துவது யாதெனில்.

அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயகராய் ஆதிமத்தியாந்த ரகிதராய் விளங்குகின்ற நமது ஸ்ரீ பெருமான் திருவடிக்கன்பராகியசக்குபாய்புரந்தர தாசர், கோராகும்பர், பத்திராசல ராமதாசர், பெரியதாசர், துக்காராம், ஏகநாத சுவாமி, நரசிம்மமேதா, சோகாமேளர், மீராபாய், தாமாஜி பண்டிதர் போசலபாவா என்னும் பன்னிரண்டு தாசர்களின் பூர்வ சரித்திர வரலாற்றை ஆதியோடந்தமாகப் புதைநிதிபோல் [illegible] பக்தி முடிவுபெறுதிருந்த ஐந்து தாசர்களின சரித்திரத்தையும் பூர்த்திசெய்து இரண்டாம்பாகமாக அச்சிடும்படியாய் அநேக புண்ணியவான்கள் கேட்டுக்கொண்டபடியால் அச்சிட்டிருக்கின்றது இதை யொவ்வொருவரும் கண்ணுறுவதில் ஆவலடங்காது இதிற் கூடிய தாசர்களின் சரித்திரத்தை வாசிக்கும்போதே ஆனந்தமெனும் பெருங்கடல் சுரந்து அமிர்தமூட்டு மின்னூலை யாவத்திராளும் வாங்கி வாசித்து ஆனந்த மடைவீரெனக் கோருகின்றனன். வேண்டுவோர் எமக்கெழுதிப் பெற்றுக்கொள்ளலாம்.

இதன் விலை ரூபா-1-8-0. ஷை கிளேஸ் ரூபா-2.

| | | | |
|---|---|---|---|
| ஷை மூன்றும்பாகம்-நான்காம்பாகஞ்சேர்ந்தது | 1 | 4 | 0 |
| அயோத்தியா காண்டம் மூலமும் - உரையும் | 2 | 0 | 0 |
| வன்னியபுராணம் மூலமும் - உரையும் | 1 | 8 | 0 |

தேவையுள்ளவர்கள் அடியிற்கண்ட விலாசத்திற் கெழுதிப் பெற்றுக் கொள்ளலாம்.

எமது விலாசம்,
புருஷோத்தம் அண்டு கோ,
சூளை போஸ்டு மதராஸ்





கடவுள் துணை.

# பஞ்சதந்திரக்கதை

# வரலாறு.



கல்விப்பொருளிலுஞ் செல்வப்பொருளிலுங் குறையில்லாதவர்களுக்கு குறையிடமாயிருக்கிற பாடலிபுரமென்னுமொரு பட்டினமுண்டு அப்பட்டினத்திற் சகலகுணங்களோடுங் கூடியிருக்கிற சுதரிசனென்னும் ராசன் ஒருவனிருந்தான் அந்தராஜா தன்பிள்ளைகள் படியாமல் மூடர்களா யிருக்கிறதைக்கண்டு வெகு விசனத்தோடு ஆலோசிக்கத்தொடங்கினான். அஃதெப்படியென்றால் கல்வியுந் தர்மகுணமுமில்லாத பிள்ளைக ளிருந்தாலென்ன பால்கொடாத வெருமைகளைக் காப்பாற்றி பலனுண்டாவதென்ன வேதசாஸ்திர மறிந்தவனாக ஒரேபிள்ளையிருந்தா லவனாலே குடும்பமெல்லாஞ் சுகமடையும் இப்படிக்கில்லாத பிள்ளைகள் கற்பத்திலேயே யழிந்தாலும் அழியாவிட்டாற் பிரந்தவுடனே இறந்தாலும் இரவாவிட்டாற் பெண்ணாகவானாலும் இல்லாவிட்டாற் பெண்சாதி மலடியாகவானாலும் போகிறது நல்லகுலத்தில் யோக்கியமானபிள்ளை இருக்கலாகாது சன்மாந்திர புண்ணியத்தினாலே இம்மைமறுமைக்கு சுகங்கொடுக்கிற புத்திரனுண்டாகிறான் பாபத்தினாற் குலத்தைக்கெடுக்கிற புத்திரனுண்டாகிறான் மேலுமிந்தப்பிள்ளையைப் பெற்றவர்கள் என்ன தவஞ் செய்தவர்களோ வென்று கண்டோர் சொல்லும்படிநடக்கிறவனல்லவோ பிள்ளையென்று தனக்குள்ளே ஆலோசித்துப் பெருமூச்சுவிட்டுப் பின்பு சபையைப்பார்த்து பருவமும் செல்வமும் ராச்சியமும் அறிவில்லாமையுமாகிய இந்த நான்கிலு ளொன்றொன்றுதானே கேட்டுக்கெல்லாமிகுந்த துணையாயிருக்கும் இந்த நான்கு மொருவனிடத்திலிருந்தா லவனென்னபாடுபடான் ஆகையால் பிள்ளை எண்ணிக்கைக்குப்பிறந்து துர்மார்க்கர்களா யிருக்கிற வென்பிள்ளைகளை நீதிசாஸ்திரோபதேசத்தில் யெந்த மகாபுருஷன் மறுஜனனம் வரப்பண்ணுவானென அப்போது சகல நீதிசாஸ்திரங்களிலும் வல்லவனாகிய சோமசன்மா வென்பவ னெழுந்து இவர்களுக்குச்சமான

வரிசையுடையவர்க ளிவ்வுலகத்தி லில்லையென்று சொல்லும்படி. இதோ நான் ஆறுமாதத்திற் செய்யமாட்டுவேன் அதுவரைக்கும் நீர் நாளை யெண்ணிக்கொண் டிருமென்று சபதம்பண்ணினான் அதைக் கேட்டு நடுக்கடலிற் றிசைதப்பியாகிய மாலுமிக்கோர் துறைசேர்ந்தாற்போலராசா மிகவும்மனமகிழ்ந்து அவனுக்கு உபசாரஞ்செய்து தன்னுடையபிள்ளைகளை அவன்வசத்தில் ஒப்பிவைத்தான் சோமசன்மா உடனே அப்பிள்ளைகளைத் தன்வீட்டுக் கழைத்துக்கொண்டு போய்க் கரும்பஞ்சாற்றைக்காய்ச்சி சர்க்கரைக்கட்டியாகத் திரட்டினாற்போல நீதிசாஸ்திரங்களைப் பஞ்சதந்திரக்கதையாகக் கற்பித்து ராஜகுமாரர்களுக்குச் சொல்லத்தொடங்கினான். அஃதெப்படியென்றால் சோமசன்மா ஓ ராசகுமாரர்களே உங்களுக்குவேடிக்கையாகச் சிலகதைகளைச் சொல்லுகிறேன் கேளுங்களென்றுசொல்ல அதென்னகதையென்றார்கள் பஞ்சதந்திரக்கதையென்று சொன்னான் பஞ்சதந்திரமென்பதென்ன தெரியச்சொல்லவேண்டுமென்றார்கள் அவை மித்திரபேதம் சுகிர்லாபம் சந்திவிக்கிரகம் அர்த்தநாசம் அல்லது லப்தஹானி அசம்பிரேக்ஷிய காரியத்துவம் என ஐந்து தந்திரங்களுண்டு அவைகளுள் மித்ரபேதமாவது சினேகத்தைக் கெடுத்துப் பகையுண்டாக்கல் சுகிர்லாபம் தங்களுக்குச் சமானமானவர்களோடு கூடிப் பகையில்லாமல் வாழ்ந்திருக்குதல் சந்திவிக்கிரகமாவது பகைவரையடுத் துறவுசெய்து வெல்லுதல் அர்த்தநாசமாவது தன் கையிற் கிடைத்த பொருளையழித்தல் அசம்பிரேக்ஷிய காரியத்துவமாவது யாதொரு காரியத்தையுந் தேறவிசாரியாமற் செய்தல் என்றுசொன்னான். ராஜகுமாரர்கள் ஐயா அக்கதைகளை எங்களுக்கு விளங்கச்சொல்லவேண்டுமென்றார்கள் சோமசன்மா உங்களுக்கு மங்களமுண்டாகவென் றாசீர்வதித்துச் சொல்லத்தொடங்கினான்.

## வரலாறு முற்றிற்று.



முதலாவது

# மித்திரபேததந்திரம்.

ஒரு காட்டிலொரு சிங்கமு மெருதுங்கூடி மிகவுமொருமை யாக வாழ்ந்திருந்தன அந்தசிநேகத்தைக் கோட்சொல்லும் லோப குணமுள்ள ஒரு நரிவந்து கெடுத்ததென்றுசொல்ல ராசகுமாரர்கள் அதெப்படியென சோமசன்மாசொல்லத்தொடங்கினான்.

தென்னாட்டிலே பகிழாரூப்பமென்னும் பட்டணத்தில் வர்த்தமானனென்றொரு வர்த்தகனிருந்தான் அவனுக்குவெகுபண மிருந்தும் இன்னுஞ் சம்பாதிக்கவேண்டுமென்கிற வாசையினாலாலோசிக்கலானான் எப்படியென்றால் யாதொன்றுசம்பாதிப்ப தருமையோ வதைச் சம்பாதிக்கவேண்டும் சம்பாதித்ததைக் காப்பாற்ற வேண்டும் காப்பாற்றினதை விர்த்திபண்ணவேண்டும் விர்த்திபண்ணினதை தானுமனுபவித்து உத்தம பாத்திரத்திற் செலவழிக்கவேண்டும் ஏனென்றால் காப்பாற்றாத திரவியம் நாசமாகும் விர்த்திபண்ணாதது குறையும் தானுமனுபவித்துச் சற்பாத்திரத்திற் செலவழியாதது வீணாகுமென்னும் சாஸ்திர மிருக்கிறதினாலும் மேலும் இன்பமும் புண்ணியமும் கீர்த்தியும் மனிதற்குள்ளே பெருமையும் உறவும் நினைத்தது முடித்தலும் யாருக்குண்டு திரளாகப்பணங் குவித்தவர்களுக்கே யுண்டு அல்லாதவர்களுலகத்திலே நடைப்பிண மாவார்களாகையினாலு மேன்மேலுஞ் சம்பாதிப்பதே யோக்யமென் றாலோசித்துக்கொண்டு தன்னிடத்திலிருக்கிற சரக்குகளை வண்டியிலேற்றி அதிற்சஞ்சீவகன் நந்தகனென்னும் பெயரையுடைய விரண்டெருதுகளைப் பூட்டி நடத்திக்கொண்டு தேசாந்திரம்போனான் போகும்போ தொருநாள் நெருங்கிய காட்டிலே மிகுந்த பாரத்தினாற் சஞ்சீவகனென்னும் மெருது காலிடறிவிழுந்து நொண்டியாச்சுது அப்போது வர்த்தமானன் அந்த எருதுக்குப் பதிலாக வேறொருதை வண்டியிற்கட்டி யோட்டிக்கொண்டு அவ்வெருதுக்கோராளை காவல் வைத்துப்போனான் பிறகந்தச் சேவகன் வர்த்தகனிடத்துக்கிரண்டொருநாள் கழித்துப்போயந்த எருதுசெத்துபோச்சுதென்று புளுகினான் இங்கே எருதோவென்றால் ஆயுசுபலத்தினாற் பிழைத்துப் புல்லுமுதலாகிய மேச்சலால் மிகவும் பெருத்துக்கொழுத்து ஒடிந்தகாலுங்கூடி யந்தகாட்டில் யதேச்சையாகத் திரிந்துக்கொண்டிருந்தது அப்படியிருக்கையில் ராச்சிய பட்டாபிஷேக சடங்குகளில்லாமல் காட்டிற் சஞ்சரிக்கிற பிராணிகளுக்கெல்லாந் தன்வல்

லமையினு லிராசத்துவத்தை யடைந்திருக்கிற சிங்கமானது தன் பராக்கிரமத்தா ற சயபாதிக்கப்பட்ட ராச்சியத்தைச் சுகமாக யனுபவித்துக்கொண்டிருக்கையில் ஒருநாள் தாகமெடுத்துத் தண்ணீர்குடிக்க யமுனையாற்றங்கரைக்குப் போகும்போது அங்கே சடுதியிலென்றைக்குங் கேட்டறியாத பேரிடிமுழக்கம்போலும் அந்தரிஷபமுங்காரம்போட்ட தொனியைச்கேட்டு திடுக்கிட்டிதேது புதிதாயிருக்கிறதென்று பயந்து நடுங்கித் தண்ணீர் குடியாமற் சும்மாவசைவறநின்றுவிட்டது அப்போது யவ்விடத்திலிருந்த சிங்கத்தினுடைய பிரதான மந்திரிகுமாரராகிய காடகன் தமனகனென்கிற மந்திரிகளிரண்டு மிந்தவதிசயத்தையறிந் தொன்றுக் கொன்று பேசத் தொடங்கின தெப்படியென்றால் தமடகன்காடகனைப்பார்த்து நம்முடைய ராசா தண்ணீர்க்குப்போய் குடியாமலேன் சும்மாநிற்கிறாரென காடகன அதைவிசாரிக்கிறதினால் நமக்காவதென்ன இறையகப்படுமா பெருமையுண்டாகுமா இனற்றுத்தவனுக்கு நாட்டுவளப்பமேன் சும்மாவிருப்பேனென்றால் தனக்குத்தகாத காரியத்தைச் செய்கிறவன் கடாவிய வாப்பைபிடுங்கின குரங்குபட்டபாடு படுவானென்று சொல்ல அதென்னவென்று காடகன்கேட்க தமனகன் சொல்லுகிறது.

மகததேசத்திலிருக்கிற சுதத்தனென்பே ரொருவன் கோயிற்றிருப்பணியாகக் கொண்டுவந் தருக்கவிட்டமரங்களில் வாட்காரன் பிளக்கும்படி முளைகளடித்துவிட்டுப்போன வொருமரத்தினமேலந்தக் கோயில் னந்தவனத்திலிருக்கிற குரங்குகளிலொன்று வந்துட்கார்ந்தது அப்போது அம்மரப்பிளப்பிற் றனபீசமிறங்கி யிருப்பதை யறியாமலடித்த முளையயசைத்து பிடுங்கினவுடனே பிளப்பு நெருக்கிப் பீசநசுங்கி யிருந்தது ஆகலால் தனக்குத் தகாத காரியத்தைச் செய்தால் யார்க்கும்பிராணச்சேதம் வருமென்று சொல்லி நேற்று நாம் தின்று மிகுந்திருக்கிற யிரையைத்தின்று சுகமாயிருப்போம் வாவென்று காடக னழைத்தபின்பு தமனகன் காடகனைப் பார்த்து சுவாமி காரியஞ்செய்யாம லிரைதேடுகிறதையே பெரிதாக நினைக்கலாமா ஒருவன் தன் மித்திரர்களுக் குபகாரமுஞ் சத்துருக்களுக் கபகாரமும் பண்ணவேண்டும் அதற்கு ராசசேர்வையே தக்கது மேலும் ராசாவை யடுத்திருக்கையில் வெகுசனங்களுக்கு நன்மைசெய்வதே ராசா சேவைக்குப்பிரயோசனமாம் இல்லாவிடிற் காக்கையுங் காகபுலியையு மெச்சிலையயு மலத்தையுந் தின்றாயிரம் வருஷம் பிழைத்திருக்கிறது நாயும் பசையில்லாதவெள்ளெலும்பை தெளிக்கடித்துப் பல்லைசந்தும் பசிதீராமற்சந்தோஷத்தையடைகிறது மேலுமெசமானுன்னையிலிருக்கிற வொருதவளை வெச்சிலைப்

பார்த்துக் கால்விழுந்து வயிற்றையெக்கிக்கொண்டு எளியமுகத்தை காட்டி முகத்தைப்பார்த்து வாலைக்குழைத்துக் கெஞ்சிக்காதுதூக்கி டந்து கொஞ்சமெச்சிலை வாங்கித்தின்னும் யானையோ பாகனைப்பாராமலு படுக்காமலுமவன் வேண்டி வேண்டி வலியக்கொடுக்க கரவத்தோடுவாங்கி நாயைக்காட்டிலு மாயிரம்பங் கதிகஞ் சாப்பிடும் சிங்கம் பசியினாற் சங்கடப்படும்போது நரி சமீபத்திலிருந்தாலுமதை சட்டைபண்ணி யானையையே கொல்லும் ஆதலாலுலகத்தில் யார் புகழோடுசீவிக்கிறார்களோ அவர்களே பாக்கியவான்கள் சிறுகுழிகள் கொஞ்சத்தண்ணீரால் நிறையும் எலியின் சோங்கை சிலதானியத்தால் நிறையும் அப்படியே அற்பருடன் இதாகிதந்தெரியாமற் கொஞ்சத்திலே சீவனம்பண்ணுவான் ஆனாலவனுக்கும் பசுவுக்கும் பேன்னபேதம் ஆகையால் ராசகாரியம்பார்த்து பெருமையுடனேசீவிக்கிறதே நல்லதென்றிப்படிசொல்லக்கேட்டு கரடகன் தமனகனைப்பார்த்துச்சொல்லுகிறது நல்லது மிந்தயோசனைகளுக்கு மிந்தப்பேச்சுகளுக்கு மிப்போது நாம் ராசகாரியத்திலிருக்கவில்லை இறைதேடுகிற காரியத்திலிருக்கிறோம் ஆதலால் நீயேன் வீணைமனோராச்சியம் பண்ணுகிறாய் மூடவன் கொம்புதேனுக் காசைப்பட்டாற் கிட்டுமோவென்றிகழ்ந்துசொல்ல தமனகன் சொல்லுகிறது நல்லதிருக்கட்டும் பிரதானியுங் காலத்தினாலப்பிரதானியாகிறான் கன்முயற்சியாலுந் தணத்தினாலும் வலுவானவனுஞ் சார்ந்தனைகிறான் அல்லாமலும் யாவருமேலானகாரியத்தையே ஆசிக்கவேண்டும் அது கைகூடாவிட்டாலும் பெருமைவரும் புத்திசாலிகளநேகமான காரியங்களைச் செய்வார்கள் மலையுச்சியிலொரு பெருங்கல்லை யேற்றுவதரிது அங்கிருந்ததைத் தள்ளுதலெளிது ஏரிக்கரைக்கட்டுதலரிது உடைத்தலெளிது ஆகையால் பெருமையுஞ்சிறுமையு மவரவராலேயவரும் முயற்சியுடைமையிகழ்ச்சியுடையானென்னும் பழமொழியினாலுங் கேட்டிலையாவென்றிப்படிச்சொல்ல தமனகனை கரடகன்பார்த்து நல்லது நீ போய்ச் சிங்கத்தினிடத்திலென்னத்தைக்குறித்துப்பேசப்போகிறாய் தமனகன் நம்முடையசுவாமி மூடத்தனத்தால் பயந்திருக்கிறான் அதை நீ எப்படியறிந்தாயென்று கேட்கிறபோது செய்கையினாலொருவனைப் பட்சி மிருகங்களு மறிந்துகொள்ளும் சொல்லாமறிகிறதுவேண்டியதப்படி அறியாவிட்டாற் புத்தியாற்பிரயோசனமென்ன ஆகையால் நானிங்கிருந்தபடியே யறிந்தேன் இப்போதுதானிதைமுன்னிட்டுக்கொண்டுபோய்ச் சிங்கத்தை சினேகம்பண்ணிக்கொள்ளுகிறேனென்ன தமனகனைப்பார்த்துகரடகன்சொல்லுகிறது நம்முடையராசாக்கள்மோந்துகொள்வதுபோற் கடிக்கிறவர்கள் அரசரும் நெருப்புமபாம்புஞ்

சரி ஆதலால் பழக்கமில்லாமலவனை எப்படிசினேகம்பண்ணிக்கொ
ள்வாயென அப்போது பெரிதுபாக்கிற பாவைகளுக் கெதுதூரம்
வித்வானுக் கெதுபரதேசம் பிரியமாய்ப்பேசுகிறவர்களுக கெவன்ச
த்துருவென கரடகனப்படியானாலும் ராசாக்களிடத்தில் அக்காலத்
திற்போனால் அவமானம்நேரிடுமென்றது அதற்குத்தமனகன் சமீப
த்திலேயேயிருக்கவேண்டும் ஏனென்றால் யார்சமீபத்திலிருக்கிறானோ
அவனுடனே ராசாக்கள் காரியங்களைச்சொல்லுகிறார்கள் கொடிகள்
கிட்டயிருக்கிற மரத்திலேயேபடரும் அரசர்களும் ஸ்ரீகளும் தங்க
ளைக்காத் திங்கிதம் பேசுகிறவர்களிடத்தில் மனதிரங்குவார்களென
கரடகன்நல்லது நீயவனிடத்தி லெப்படி பேசுவாயென்றது தமனக
ன் நல்ல மழைபெய்திருக்கையி லெப்படிவிரையினின்று முளைகள்பு
றப்படுமோ அப்படிபோல ராசாவின் கேள்விக்கேட்க வென்வாக்கி
னின்று முத்தரவுபுறப்படும் ஆயினுமொருவேளை பிரகஸ்பதியும்பே
ச்சிற்றவறுவானானால் மற்றவர்களுக்குக் கேட்பானேன் ஆயினுங்கா
லமறிந்து பேசினால் யாதோரவமானமும்வராது ராசா தன்காரியம்
யாராலேயாகிறதோ அதனிடத்திலொருவேளை சிறிதுகுற்ற நேரிட்
டாலுமதைபாராட்டாம லவனைப்பரிபாலித்து விர்த்தியடையப்பண்
ண வேணும்மெனகரடகன் அரசர்கள்மலைபோ லனுசரிக்கிற தற்கு
க் கடினமாயிருக்கிறார்களென தமனகன் ஆயினு மவர்கள் சுபாவம
றிந்துபேசித்தனக் கிஷ்டம்பண்ணிக் கொள்ளவேண்டுமென்று கரட
கனிடத்திற் செலவுபெற்றுக்கொண்டு சிங்கத்தி னிடத்திற்குப்போ
ய்த் தூரத்திலே நின்று தண்டம் பண்ணி ராசாவினுத்திரவினா
லுட்கார்ந்த வுடனே சிங்கம் நெடுநாளாக வுன்னைக்காணேனே யெ
ன தமனகன் இப்போதுதேவரீரிடத்திற்குவர [illegible] நேரிட்
டதனாற் தங்களுடை திருவடியண்டை வரலானேன் இல்லா விட்டா
ல் வந்ததற்குப் பிரயோசனமென்ன ராசாக்களுக்கொருவராலும் ப
லனில்லாவிட்டாலுமொருவேளை சிறுதுரும்புப் பல்லுக்குதவுமவு
ம் மற்றவைகளுக்குகேட்பானேன மேலும் ஒருவேளை அரசர்கள்
குணவானை அசட்டைபண்ணித் தள்ளிவிட்டாலுமவன் சற்குணம்
போய்விடுமா நெருப்புத் தலைகீழாகுமா ஆகலாலரசர்கள் பரிசோதி
த்தறிந்து யோக்கியனை நல்லகாரியத்தில்வைத்தாலவன் ராசாவுக்கு
கீர்த்தியைப் பெருகப் பண்ணுவானகையா லென்னைத் தாங்கள்சிறு
நரியென்று அவமானம் பண்ணலாகாது விஷ்ணு கொடுத்திருக்கிற
வாராக வடிவையுலகத்தில் பூசிக்கவில்லையா என்றுருவத்தைப்பாராமற்
குணத்தைப் பார்க்கவேண்டும் ஏனென்றால் மலைபோலிருக்கிற தோ

சிறு சுள்ளாணியா னிலைபெறும், நானுஞ்சுவாமிகாரியத்திற் பற்றுள்ளவன், கருவியுங்காலமுமறிந்து கருமமுடிக்க மாற்றலுள்ளவன், இந்தவல்லமை யெல்லாமுமது சார்பிருந்தாற் பிரகாசிக்கும், வாள்முதலிய ஆயுதங்களும், வீணைமுதலிய வாத்தியங்களும், பூமியும், ஸ்திரீகளும் யோக்கியர்களுஞ் சாஸ்திரங்களுமாகிய விவையெல்லாம் பரிபாலனம் பண்ணுகிறவர்களாற் பிரகாசிக்கும் அண்டையிற் சமர்த்தனில்லாதராஜாவுக் கபகீர்த்திவரும் என்றிப்படிச் சொல்லக்கேட்டு சிங்கம் தமனகா நீயென்பிரதானி புத்திரனல்லவா என தமனகன் சுவாமியென றுவணங்கிச் சும்மாவிருந்தது சிங்கம் எதாவதுசொல்லவேண்டுவதிருந்தாற் சொல்லென தமனகன் தேவரீர் தண்ணீர்க்குவந்து குடியாமல் மெய்மறந்து சும்மாநிற்கிறீர்களே என சிங்கம் மெய்தான்நானிந்தக்காட்டில் வெகுநாட்சுகமாயிருந்தேன் இப்போதிதைவிட்டுவிடத்தக்கதாகச் சம்பவித்திருக்கிறது என்னேறக்குங்கேளாத மேகமுழக்கம்போலொருதொனி இன்றைக்குக் கேட்டேன் அதனுலேதானதுமுழக்கம்போலவே யிருக்குமல்லவோ அந்தப்பிராணியும் ஆதலா லிதைக்குறித்தென்ன சொல்லுகிறாயோ வதுவேயெனக்குப்பிரமாணம இப்போது நீவழுக்கி விழுக்கிவிழுகையி லொன்றுகோல்போற் கிடைத்தாயென தமனகன் சுவாமி தொனியினுலே பயப்படலாகாது முன்னொருவன் ஒருதொனியைக்கேட்டு பயந்து பிறகு நெருங்கப்பார்த்தவுடனே யதுகே தோலுங்கோலுமிருக்கக்கண்டானென சிங்கம் அதென்னவென்றுகேட்க தமனகன் ஒருநரி பசியால்வருந்தி யிரைக்காகத்திரிகொரு போர்க்களத்தில் வரும்போதங்கே அசதியிலுண்டான ஒருபெரிய தொனியைக்கேட்டுமிகவும்பயந்து நான்செத்தேனென்று திடுக்கிட்டது பிறகு சற்றே முன்னே போனவுடனங்கொரு பெரிய பேரிகையைப்பார்த்து அதைத்தொக்கிற மரத்தின்கிளை காற்றிலசைந்ததி லடிக்கத்தொனியுண்டாயிற்றென்றறிந்துக்கொண்டு அதனருகே போய்ப்பார்த்து அங்கேபேரிகையின் தோலுங்கோலுமே யல்லாமல் வேறொன்றுமில்லையெனத்தெளிந்து சந்தோஷமடைந்தது ஆகலாற் சத்தத்தினுலேமாத்திரம் பயப்படலாகாது தாங்கள் கட்டளைகொடுத்தாலித்தொனியினுண்மூலத்தையறிந்துவருவேனென சிங்கம் அப்படியே செலவுகொடுத்தது பிறகு தமனகன் சஞ்சீவகனென்னு மெருதினிடத்திற்போய்ப்பேசி அதைசினேகம்பண்ணிக்கொண்டு சிங்கத்தண்டைவந்து தண்டம் பண்ணி முன்னேநின்றது சிங்கம நீயந்தப்பிராணியைப் பின்னதென்றறிந்துவந்தாயாஎன தமனகன் தாங்கள் கட்டளைப்படியே போய்ப்பார்த்தே

ன் முன்தாங்களெப்படிநினைத்தீர்களோ அப்படியேபுஷ்டியாகயிருக்
கின்றான் அவன்றங்கனட்பைவிரும்புகிறான் கட்டளையானாற் றிரும்
பிப்போய்த் தரிசனத்துக் கிட்டுக்கொண்டுவருவேனெனசிங்கம் நல்
லதப்படியேயாகட்டுமென மறுபடிதமனகன் எருதண்டைபோய் யு
பசாரத்தோடழைத்துவந்து ராஜாவை தரிசனம்பண்ணுவித்தது பி
றகு சிங்கத்துக்குஞ் சஞ்சீவனுக்கும் வெகுசினேகமுண்டாய் ராஜா
வுக்கு மற்றயாருமவசியமில்லாம லிப்படி வெகுகாலங்கழிந்தது அப்
போது பிரதானிபுத்திரர்களாகிய கரடகதமனகரென்னு மிரண்டுநரி
களுக்கு மிரையொன்றுமகப்படாமையால் ஆலோசிக்கதொடங்கின
து தமனகன் நாம்காட்டிலேதனித்திருந்த சிங்கத்தினுடனேஎருதை
சினேகம்பண்ணிவித்தது யானையானது தன்மத்தகத்தைக் கொத்து
கிறதற்கு யங்குசத்தைத் தானேயெடுத்துப் பாகன்கையிற் கொடுக்
கிறதுபோலாயிற்று மேலும் முன்னாளாட்டுக்கடாச்சண்டையில் நரி
செத்ததும் ஆஷாடபூதியின் கூட்டுறவார் சந்நியாசிபொருளிழந்தது
இடைச்சியின்சேர்க்கையா லம்பட்டத்தி மூக்கிழந்தது மெப்படியவ
ர்கள் குற்றத்தினாலே சம்பவித்ததோ அப்படியே நம்முடைய தோ
ஷத்தினாலே நமக்கிரைகிட்டாமற்போயிற்றென கரடகன் அதுவெ
ப்படிச்சொல்லென தமனகன்சொல்லுகிறது ஒருதேசத்திற் றேவச
ன்மாவென்கிற வொரு சந்நியாசிதான் பிச்சையெடுத்துச்சம்பாதித்
தத்திரவியத்தைக் கந்தைக்குள் வைத்தியார்க்குந்தெரியாமற் றைத்து
ப்போர்த்துக்கொண்டு பின்னும் பிச்சையெடுத்துச் சாப்பிட்டுக்கொ
ண்டுதிரிய அச்சூதையறிந்த ஆஷாடபூதியென்னு மொருதிருட்டு பி
ராமணன் இந்தக்கந்தையைமாத்திர மெப்படியாயினுந் திருடிக்கொ
ண்டால் நாமெப்போதுந் திருட்டுவேலை செய்யவேண்டுவதில்லை நம்
முடையதாசிக்கு வெகுநாளைக்கு நடக்குமென்றாலோசித்து ஒரு பிர
மசாரியைப்போலவந்தச் சந்நியாசியினிடத்திற்போ யவன்காலில்
விழுந்து அடியேனுக்கு ஞானோபதேசஞ்செய் திந்த நிசாசரமாகிய
சமுசாரசாகரத்தினின்று மலையாமற் சிறிது கடைக்கண்ணாற் பார்த்
தென்னைக் கடைத்தேறபண்ணும் ஓமகானுபாவா ஓபாதுக்கஞ்சகி
யாத பரமபுருஷா என்றிப்படி யழுதகண்ணுஞ் சிந்தியமூக்குமாகக்
கலங்கிநிற்க அதை பாசாங்கென்றறியாத அந்தச்சந்நியாசி இவன்ற
லைமேற் கையைவைத்துப் பயப்படாதேயென்றான் அதுமுதலாக வா
ஷாடபூதி வெகுபயபத்தியுடனே அவன்காலாலிட்டவேலையைக்கை
யாற்செய்துக்கொண்டு கந்தைக்குச்சமயம் பார்த்துக்கொண்டுஇருக்
கும்நாளில் ஒருநாள் ஒருபிராமணன்வீட்டில் இருவருமவிலாப்பூரம்
வீங்கப் பிட்சைப்பண்ணிக்கொண்டு வெகுதூரம்வந்தபிறகு ஆஷாட்

பூதி யொருவருமறியாம லொருதுரும்பையெடுத்துத் தன்றலைமேலே
வைத்துக்கொண்டந்தத்துரும்பைக் குருவுக்கெடுத்துக்காட்டி ஐயோ
நமக்குப் பிட்சைகொடுத்த பிராமணன்வீட்டுத் துரும்பென்றலையி
லொட்டி வந்துவிட்ட.தோ அன்னமிட்டவீட்டிற் கன்னமிடலாமா
உப்பிட்டவரை யுள்ளளவுநினையென்று பழமொழியிருக்கிற தன்
றோஎன வாய்பகறநடுநடுங்கி இதையந்த வன்னதாதாவீட்டிற்போட்
டுவிட் டிதோநொடியளவில்வருவேனென்று குருக்கள்பார்க்கும்படி
பரபரப்பாகச் சிறிதுதூரங் காலடிபிட்டத்திற் படும்படியோடி ஒரு
செடிமறைவி லுட்கார்ந்திருந்துவிட்டு பின்பிரைக்க விரைக்கவோடி
யந்தாசாரியன்காலில் விழுந்தெழுந்து சுவாமி உம்முடைய அநுக்கிர
கத்தினாலிந்தப்பாவத்திற்குத்தப்பினேன் என்றான் இதைப்பார்த்து
அந்த ஏழைச்சந்நியாசி ஆச்சரியப்பட்டு இவன்பரசொத்துக்காசை
படாத பரமாத்துமாவென்றுநம்பித் தன்னுயிர்க்குச்சமானமாக நி
னைத்திருந்த கந்தையைச் சீஷன்கையிற்கொடுத்து ஒருகுளக்கரையி
லிருக்கச்சொல்லித் தான் சலபாதைக்குப்போய்க் காலலம்பப்போ
னவிடத்தில் இரண்டாட்டுக்கடாக்களொன்றோடொன்று முட்டிச் ச
ண்டைசெய்ய அவைகளின் மண்டையிலிருந்தொழுகுகிறவுதிரத்தை
யுண்ணலாமென் றொருநரிபோயிரண்டுக்கு நடுவிலகப்பட்டிறந்தது,
அந்த அனர்த்தத்தைப் பார்த்துக்கொண்டு சிறிதுநேரமிருந்தான்
அப்போதந்தச்சீஷன் இதுதானல்லசமயம் இதுவிட்டாலினிக்கிட்டு
மா காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ளவேண்டுமென்று நினைத்து
கந்தைச்சுருட்டிக்கொண் டோடிப்போனான் உடனேசந்நியாசிவந்து
பார்த்துச்சீஷனைக்காணாமல் ஓகோநம்மை ஆஷாடபூதியேய்த்தானே
நாம்மோசம்போனோமேயென்றுதிகிற்பட்டு உப்புக்கண்டம்பறிகொ
டுத்த பாப்பாத்தியைப்போல் ஒருவருடனுஞ் சொல்லாமற்றேடிக்
கொண்டுபோயெங்குங்காணாம லன்றிராத்திரி ஒருபெரியபட்டணத்
திலோரிடையன்வீட்டுத் தலைக்கடைத்திண்ணையில் வந்துசேர்ந்து நி
த்திரையில்லாமற்படுத் தெண்ணமிட்டுக்கொண்டிருந்தான் பொருளி
ழந்த சந்நியாசி இப்படியிருக்கையில் நாடோறுந் தன்புருஷனில்லா
தவேளைபார்த்துப் பரபுருஷனிடத்திற் போகிறவளாகிய அந்தவீட்
டிடைச்சி அன்றையதினமுந் தனக்குத்தூதிகையாகிய அம்பட்டத்தி
வந்து கள்ளபுருஷன்வந்திருக்கிறசெய்தி சொல்லக்கேட்டுத் தன்புரு
ஷனில்லாதிருக்கக் கண்டவளுடனே கூடப்போனாள் போகும்போ
து புருஷனெதிரேவரக்கண்டு வேறொருகாரியத்திற்குப் போனவள்
போற் சாக்கிட்டுக்கொண்டு திரும்பி வீட்டுக்குவந்து விட்டாள் புரு
ஷனந்தக்கபடத்தையறிந்து மிகுந்தகோபத்தோடும்போயவளைவாய்
சலிக்கத்திட்டி யொருதூணிற்கட்டி கைசலிக்கவடித் திராத்திரிக்கெ

லலா மிப்படியேயிரு வெள்ளாட்டியென்று நித்திரைசெய்தான் பக்கத்துவீட்டுக்காரியாகிய அந்ததாதி மறுபடியும்வந்து ஐயோயவனங்கேயுன்விரகத்தினாற் செத்தாற்போற் கிடக்கிறானே இப்போதுஅவிழ்த்துவிடுகிறே னென்னைகட்டிவைத்து நீ பாயந்தச் சோரபுருஷனைச் சந்தோஷிப்பித்துவா மறுபடி நானுன்னைக்கட்டிவைத்துப்போகிறேனென்றுசொல்ல இதுநல்லவுபாயந்தானென்றுதாதியை அப்படியேகட்டிவைத்து விளக்கையுமவித்துவிட்டு இடைச்சிசோரபுருஷனிடத்திற்குப்போ யிருக்கும்போது யிடையன் விழித்துக்கொண்டு தூணிற்கட்டுண்டிருப்பவளிடத்திற்குப்போய்க் கோபத்தாலடித்தானவளம்பட்டிக்கிடமாயால் அதற்கொன்றுஞ்சொல்லாமலிருக்கக்கண்டவள் சோரமபோனது மெய்தானென்று மிகவுங்கோபித்து கத்தியையெடுத்து மூக்கையறுத்து மறுபடியும் போய்நித்திரைசெய்யும்போது போனவிடைச்சி சோரபுருஷனை யனுபவித்துவந்துகட்டுண்டிருக்கிற தாதியைப்பார்த் தையவசமாச்சாரமென்றாள் தாதிமூக்குத்தவிர மற்றவையெல்லா மெதாப்பிரகார மிருக்கிறதென பிறகவனைவிட்டுப் பழயபடி யவளாற்றன் கட்டுண்டிருக்கையி லிடையனெவிழித்துக்கொண்ட னவ்வாவுமிவளறிந்து அதனைப்பார்க்காயோ பாதககா வீணாகவென்மூக்கையறுத்து குரூபியாக்கிவிட்டாயே ஒருவனுமொருத்திக்கும் பிறந்தொருவனுக்கு முன்றானைபோட்டவளானலென் மூக்குவளரட்டு மென்சபதத்தை லோகசாட்சகன் கேட்டு கட்டுமென்றுசொல்லிச் சும்மாயிருந்தாள் இடையனுடனே யெழுந்தோடிவந்துபார்க்கப்பழயபடி மூக்கிருக்கக்கண்டு பயந்தாச்சரியப்பட்டிப்படிக்கொத்த பத்தினியொருத்தி யுகத்திலிருக்கிறதினாலே தானே மழைபெய்கிறது கடலுங்கரையில்லாம னிற்கிறதெனநினைத்துப் பெண்ணே குலவிளக்கே தீண்டானெருப்பேயென்று சாஷ்டாங்கமாக விழுந்து கட்டையவிழ்த்துவிட்டுவிட்டான் இதுயிப்படிஇருக்க முன்மூக்கறுப்பட்டு முனைகுலைந்த தாதியானவளற்றமூக்கை கையிலெடுத்துக்கொண்டு சீக்கிரமாகத் தன்வீட்டுக்குப்போய் யிதையெப்படி மறைக்கலாமென்று விசாரப்பட்டுக்கொண்டிருக்கும்போது பொழுதுவிடிந்துவிடியவேயம்மட்டனெழுந்திருந்து வேலைசெய்யவேண்டும் அடப்பத்தையெடுத்துக்கொண்டு வாடியென்றுகேட்டான் அவள்கதவின்பின்னே யிருந்தபடியே யொருகத்தியையெடுத்தவன்முன்னே விட்டெறிந்தா ளவன்கோபித்து யடப்பத்தைக்கேட்டாலொருகத்தியைவிசிறி யெறிந்தாயென்று படபடப்புடனதை மறுபடியவள்முன்னேயெறிந்தான் யெறிந்தவுடனே ஐயோபாவி அநியாயமாகமூக்கை

யறுத்து முனையைக் குலைத்துப்போயொன்றந்தக[illegible] மறுபட்டமூ
க்கையுங் கையிலெடுத்துக்கொண்டு மிருந்தவாகரோஷத்தோடுதெ
ருவிலோடிவந்து பிரயத்தியாயிருக்கிறதென்னை யிந்துஷ்டன்மூக்
கையறுத்தானே யிக்குரூரில்யாருங்கேட்டாரில்லையே கூகூவெனவே
யழுதாள் யிதைத்தாக்கண்டு அந்நாவிதனைப்பிடித்து கழுத்தைப்ப
ற்றிகெற்றிக்கொண்டு நாவிதச்சியை யழைத்துக்கொண்டுபோய் ரா
ஜாவுக்கறிவித்தார்கள் ராஜா அவனைப்பார்த்து அடா இவள்மூக்
கையேனறுத்தாயெடா அவனொன்றுஞ்சொல்லாமல் விழித்
தான் பிரகாசனிந்துஷ்டனை கொண்டுபோய்க்கழுவிலேற்றுங்களெ
ன்று கட்டளைகொடுக்க விந்தச்சேதியையந்தப் பொருளிழந்த சந்நி
யாசிகேள்விப்பட்டு உடனே ராஜாவினிடத்திற்கோடிவந்து மகாரா
ஜாவே அவன்பராதியல்ல விவ்வாச்சரியமெல்லாநானறிவேன் எப்
படியாட்டுச்சண்டையி னரிபிறந்ததோ அவ்வாருஷாடபூதியின்
சேர்க்கையா லென்பொருள்போயிற்றோ வப்படியேயிடைச்சி சுக
வாசத்தினால் இவள்மூக்கிழந்தாளென்றெல்லாஞ் சாங்கோபாங்கமா
கச்சொல்லி யிம்மூன்றுந் தங்கடோஷமேயல்லாமல் மற்றெவரிடத்
திலுமில்லையாகையா லம்பட்டனையனியாயமாய்க்கழுவேற்றுவானே
னென இவையெல்லாங்கேட்டு ராஜாவிவர்களைவிட்டு இடைச்சியை
பிடித்துவரச்சொல்லி யவளை மூக்கறுக்கனுப்பினானென இதைகேட்
டுக் கரடகனிடற்கு நான்செய்யத்தக்கதென்னவென்றுகேட்கத் தமனக
ன் யாதொன்றுபோயிற்றோ அதைமறுபடிச்சேகரிக்கவேண்டும் எது
சம்பாதிக்கவில்லையோ அதைச்சம்பாதிக்கவேண்டும் எதிராகவரும்
விக்கினங்களைத் தடுக்கவேண்டும் என்றிப்படியாலோசித்துப் பண்
ணுகிறவனல்லவோமந்திரி இப்போதுநமக்குப் பிங்களசஞ்சீவர்களு
டையசினேகத்தாலெல்லாச்சங்கடமுநேரிட்டது இவர்களுடையநட்
பைப்பிரித்தாற்றமைக் கிவ்வளவன்னங் கிடைக்குமென்றுசொல்ல
கரடகன் அந்தப்பிங்களசீவகர்களுறவைக்கெடுக்க யாராலாகும ம
ணியினின்று மொளிபிரிக்கப்படுமோ இதுமுடியாதகாரியமல்லவோ
என தமனகன் என்னசொல்லும் உபயத்தாலாகிறது பராக்கிரமத்
தாலாகுமோ ஒருகாலஞ் சொர்ணமாலையா லொருகிருஷ்ணசர்பத்
தைக்கொன்றதறியாயோஎன கரடகன்அதெப்படியென ஆவலோடு
கேட்கத் தமனகன்சொல்லத்துடங்கிற்று.

ஒருபெரிய மரத்திற் கூடுகட்டிக்கொண்டு ஆணும்பெண்ணுமா
கிய விரண்டுகாக்கை னெடுநாள் வாழ்ந்திருக்கும்போது அந்தமரப்
பொந்தி லொருநாகம்வந்துசேர்ந்து அந்தக்காக்கையிடுகிற முட்டை

களையெல்லாங்குடிக்கக்கண்டு இதற்கென்னசெய்யலாமென்று மிகவு
ம்விசனப்பட்டுத் தனக்குச்சினேகமாகிய நரியிடத்திற்போய் நடந்த
சங்கதிகளைச்சொல்லி இப்போதாகிலுமுட்டைகளைக் காப்பாற்றுகிற
தற்கென்னசெய்யலாமென நரி ஒருநண்டானது வெகுநண்டாசை
யைக்காட்டிக் கொக்கைக்கொன்றார்போல் அதை ஒருஉபாயத்தாற்
கொல்லவேண்டுமென காகம் நண்டு கொக்கையெப்படிகொன்றது
சொல்லுமையாவென நரிசொல்லுகின்றது.

மீன்களையே மிகுதியுந்தின்றுவளர்த்தவொருகொக்கானதுகுள
க்கரையில்வந்து விசனமாநின்றுகொண்டிருந்தது அப்போதுஅதிலி
ருந்தமீன்கள் கொக்கைப்பார்த்து நீ உன்னாகாரத்தைவிட்டுச்சும்மா
விருப்பானேன்சொல்லென கொக்கு நான்மீன்றின்பது மெய்தான் ஆ
யினுமின்றைக்கிங்கே செம்படவன்வந் தெல்லாமீன்களையும் பிடிக்க
விருக்கிறதினால் என்னுடையயிரைகளெல்லா நிர்மூலமாய்ப் போகு
மேயென்றேங்கிச் சும்மாவிருக்கிறேனென இதைக்கேட்டுமீன்களெ
ல்லாங்கூட்டங்கூடி எவன்நமக்குபாயஞ்சொன்னானோ அவனேயுபா
யஞ்சொல்லுவானென்றாலோசித்துப் பிறகுகொக்கைப்பார்த்துநீயே
யெங்களையிப்போதிரட்சியெனகொக்குநான்செம்படவனோடுசண்டை
பண்ணசமர்த்தனல்ல மேலும் நானேகிழவன் உங்களை வேறோரிடத்
திற்கு கொண்டுபோவேன் அதனாலெனக்கு மிந்தத்தள்ளாமையான
காலத்திற் பரோபகாரியென்கிறபெயரும்வரும் நீங்களும் வெகுகால
ம்பிழைத்திருப்பீர்களென அப்போதந்தப்பேதைமையான மீன்க
ளெல்லாம் பிராணனைக்காப்பாற்றும்பொருட்டுத் தன்பேச்சைநம்பி
நல்லதப்படியேகொண்டுபோகவேண்டும் எனக்கெஞ்ச அந்தவஞ்ச
னையானகொக்கு நடைக்கொவ்வொன்றாகக் குளத்திலிருக்கிற மீன்க
ளையெல்லாம் மூக்கினாற்கௌவிக்கொண்டுபோய்ச் சிலமீன்களைத் தி
ன்று மற்றமச்சங்களை ஒருபெரியபாறையின்மேலுலரவைத்தது பிர
கு அந்தக்குளத்திலிருந்த ஒருநண்டு இந்தக்கொக்கைப்பார்த்து ஓஜீ
வகாருண்ணியனே என்னையுமவ்விடத்திற் கொண்டுபோகவேண்டும் எ
னவேண்டிக்கொள்ள கொக்கு வருங்காலத்திலெதுவும் வலியவருமெ
ன்றுள்ளுக்குள்ளேசந்தோஷித்து அப்படியேநண்டையுங் கவ்விக்
கொண்டுபோகும்போது நண்டு வழியில்மீன்கள் செத்துக்கிடக்கிற
தையு மீன்முட்கள் சிந்திக்கிடக்கிறதையு மீன்கள் பாறையின்மேலு
லருகிறதையும்பார்த்து ஐயோபலமீன்களையுங்கொன்று நம்மையுங்
கொல்லவந்தது நம்மைக்கொல்வதற்கு முன்னமே நாமிதைக்கொல்

வோமென்று ஒரு உபாயம்நினைத்துக் கொக்கைப்பார்த்து நீ யென்
னைவருத்தப்பட்டெடுத்துக்கொண்டுவந்தாய் அங்கேஎன்னுடையபரி
வாரங்களிருக்கின்றன ஆகையாலங்கே என்னை நீமறுபடியுங்கொண்
டுபோனா லவைகளையுங்காண்பிப்பேன்என அதைக்கேட்டுக்கொக்கு
பேராசைபட்டுத்திரும்பி யந்தக்குளத்திற்கு நேரேவருகையில் நண்
டு கொக்கினா லந்தக்கொக்கின்கழுத்தையிரண்டுதுண்டாகநறுக்கி கு
ளத்தில்வீழ்ந்து சுகமாய்வாழ்ந்தது ஆகையாலந்தக் கொக்கைப்போ
லப் பாம்பையுங்கொல்லவேண்டும் என காகம் அப்படிப்பாம்பைக
கொல்ல நான்செய்யவேண்டியவுபாயமென்ன என்றுகேட்கநரி இப்
பட்டணத்து இராஜாகுமாரத்தி குளிக்கிறமஞ்சனச்சாலைக்குப்போ
ய் அவள்ஸ்நானம்பண்ணும்போ தாபரணங்கள்கழற்றிவைத் திருக்
கும் அந்த ஆபரணங்களிலொன்றையெடுத்துச் சனங்கள் பார்க்கும்
படிகொண்டுவந்து மரப்பொந்தியில்போடுஎன்றுசொல்ல காக்கையு
மப்படியேசெய்ய அந்தவிராஜனுடைய வேலைக்காரர்போய்அந்தமர
த்தின்பொந்தைப்பிளக்க நாகஞ்சீறிவந்துவரவே அதை இரண்டுது
ண்டாக நறுக்கியெறிந்தார்கள் இப்படிக்காகத்தின் காரியநிறைவேறி
ற்று ஆகையாலெல்லாமுபாயத்தாற் கைவசப்படும் எவன் புத்திமா
னோ அவன்பலவான் எவனுக்குப் புத்தியில்லையோ அவனுக்குப்பல
மெங்கே பூர்வம் புத்திவலத்தினா லொருமுயல் சிங்கத்தைக்கொன்ற
துஎன அதெப்படிஎன்று கரடகன்கேட்கத் தமனகன் சொல்லு
கின்றது.

ஒரு நெருங்கியகாட்டின் மதோன்மத்த னென்றுஞ் சிங்கமான
து அக்காட்டிலிருக்கிற மிருகங்களையெல்லாங் கொன்று தின்றுகொ
ழுத்து வெறிகொண்டு திரிகிறநாளில் மிருகங்களெல்லாமொன்றாகத்
திரண்டுபோய் ஓய்மிருகேந்திரா உன்னுடையகாட்டிலிருக்கிறமிருக
ங்களையெல்லா மிப்படிகொன்றால் மிருகங்கணிர்மூலமாய்ப்போம் ஆ
தலாற் றினமொவ்வொன்றுமக் கிரைகொடுத்துக்கொண்டுவருகிறோ
ம் அதைநீர்பட்சித்துக்கொண்டிருக்கலாமென்று பிரார்த்திக்க சிங்க
ம்மெய்தானென்று நம்பி அப்படியே செய்கிறேன்என்று சத்தியஞ்
செய்துகொடுத்தது பின்ஒவ்வொன்றாகத்தின்றுகொண்டுவருநாளில்
ஒருநாளொருகிழமுயலினுடைய முறைவந்தது அப்போதுமிருகங்க
ளெல்லாங்கூடி இன்றைக்குன்முறையோஎன்றுசொல்ல முயலானது
இன்றைக்குநமக்கு மரணம்வந்தபடியா லிதற்கோருபாயம் யோசிக்
கவேண்டும் புத்தியானுக்கெது தன்கைகூடாது ஆகையினா லிப்போ
து உபாயத்தாற் சிங்கத்தை கொல்வோமென்றாலோசித்து மெள்ள
மெள்ளவந்து அந்தச்சிங்கத்தின் பசிவேளைதப்பிவரச் சிங்கம்பார்த்
து முயலே யானையானாலு மென்னுடைய பசிவேளை தப்பிவருகிறதி
ல்லையே நீயெவ்வளவுபிராணி இப்படித் தாமசமாய் வரலாமாஎன்று
மிகுந்தகோபத்தோடு கையைத் தரையில்மோதிக்கேட்க முயல்

அய்யனே இதுவென்குற்றமென்று உன்னுடையபசிவேளைக்கே வந்
தேன் வந்தவழியிலொரு பொல்லாதசிங்கத்தைக்கண்டு பயந்தொளி
த்திருந்து அந்தச்சிங்கம்போனபின்பு வந்தேனென்றுசொல்லச் சிங்
கம் என்னையல்லாமலிந்தக்காட்டில்வேறேசிங்கம் பார்த்தாயா காட்
டுவாயென்றுரைக்க அழைத்துக்கொண்டுபோய்ச் சேறு நீரு மிருந்த
வொருபாழுங்கிணற்றை இதிலேயிருக்கிறதென்றுகாட்ட சிங்கம் மு
யலின்பேச்சைநம்பிக் கிணற்றையெட்டிப்பார்த்தது அதிற் றோன்றி
ன தன்னிழலை அந்தச்சிங்கமிங்கேயிருக்கிறதென்றெண்ணிக்கோபத்
தோடதைக்கொல்லவேணுமென்றதிற்பாய்ந்து சேற்றிலழுந்தியிருந்
தது ஆகையால் யெவன்புத்திமானோ அவன்பலவானென்றுனக்குச்
சொன்னேனென்ன கரடகன் சிங்கத்தினிடத்திற்குச் சுகமாய்ப்போ
உனக்கு மங்களமுண்டாகட்டுமென்னப் பிறகு தமனக னந்தச்சிங்கந்
தனித்திருக்கிற சமயம்பார்த்துப்போய்த் தண்டம்பண்ணி சுவாமிஉ
மக்கின்றைக்கொரு பொல்லாங்கு நேரிட்டது அதைநானறிந்துகட்
டளையில்லாமல விண்ணப்பம்பண்ணிக்கொள்ளலானேன் என சிங்க
ம்அதெனனசொல்லென தமனகன் உம்முடைய மித்திரனாகிய சஞ்சீ
வகன் உம்மிடத்தில்விசுவாசங்காண்பித்து உம்முடையராச்சியத்தை
பிடுங்கிக்கொள்ள யோசித்திருக்கிறான் இதைநீர் பொய்யென்றெண்ணி
த்துக்கோபித்தாலும் அல்லது தண்டித்தாலும் ராஜனுக்கொருதுன்
பம்வருமபோது தன்னலத்தைப்பாராமல் ராஜனுக்கு நல்லவுபாயங்க
ளைப்போதித்துச் செய்யத்தக்ககாரியங்களைச் செய்வித்தல் மந்திரி
களுக்கு நீதித்தொழிலாகையாலுமக்கிதைத் தெரிவித்தேனென பிங்
களன் இதைக்கேட்டாச்சரியப்பட்டுச் சும்மாவிருந்தது பின்னுந்த
மனகன் நீரவனை முக்கியப்பிரதானியாக்கினீர் அப்படியேயிருக்கட்டு
மெனக்கென்ன ராஜாவும் பிரதானியுஞ் சமானமாயிருந்தால் ராஜல
ட்சுமி இவ்விருவரிலொருவனைக் கைவிடுவாள் மேலுமெப்பேதிராஜா
வொருவனையே பிரதானியாக்குகிறானோ அப்போதந்தப் பிரதானிக்
குக் காரியமுண்டாகிறது அவன்சுதந்தரனாய்ராச்சியவாசையால் ரா
ஜாவைக்கொல்ல விச்சிக்கிறான் ஆகையா லிப்பட்டமந்திரியை வே
ரோடுகளையவேண்டும் இல்லாவிட்டாலவனாற் றீங்குநேரிடும் இதை
ச்சொல்லவேண்டுமா தாங்களெல்லாமறிந்திருக்கிறீர்கள்லோகத்திற்
செல்வத்தைவிரும்பாதவ னருமையென்றிப்படியெல்லாஞ் சொல்லக்
கேட்டுச்சிங்கம்நகைத்து சஞ்சீவகனிடத்திலெனக்கிருக்கிறசிநேகம்
போகாது மித்திரர்களநேக வபிப்பிராயம்பண்ணினாலு மதைப்பிரியமா
க்கேவினைக்கவேண்டும் எனத்தமனகன் இதுதான்புத்திக்குதோஷம்

மிகனுமக்கபாயம்வரும் ஏனென்றால் யாதொருவன் சாதுக்கள்புத்
தியைக்கேளாமற் துஷ்டபுத்தியைக் கேட்கிறானோ அவன் மருந்து
தின்னாத ரோகியைப்போல விபத்தையடைவான் காதுக்கினிமையா
யுமிதமாயண்ணுகிறதாயு மிருக்கிறவசனந்துல்லபம் சாதகனுடையவ
சனஞ்செவிக்கினிமையா யிருக்குமானா லதுகேட்க லாகாதெனசிங்க
ம்ப்ராணபயங்கொடுத்து ரட்சித்தவனெனக்குத் துரோகம்பண்ணுவா
னென்னபேச்சுபேசுகிறாய்போவென் மறுபடிதமனகன் அஷ்டர்கு
ணமாறுமா நாயின்வாலை கணக்கெடுக்கலாமாஎட்டிமரத்துக்கமுதம்
வார்த்துவளர்த்தாலு மதற்கு தித்திப்புண்டாகுமா ஆகையாற்றுங்க
ள்சேராமலிருக்க யிந்தவிர்த்தாந்தத்தை சொன்னேன் ஏனென்றால்
பிறர்க்கிதம்பண்ணுவது சாதுவுக்கும் முக்கியதர்மம் இனிமேலென்
மேற்குற்றமில்லை யாதொரு சமயத்தில் ராசா பாமரர்களுடைய புத்
தியைகேட்டுச் சங்கடப்படும்போது காரியக்காரர்மேற் குற்றஞ்சும
த்துகிறானாதலால் சொன்னேனென் றிப்படிச்சொல்லிச்சும்மாவிருந்
தது அப்போது சிங்கஞ்சொல்லுகிறது அதைநான் சஞ்சீவனுக்குச்
சொல்லவேண்டுமென தமனகன் அவனுக்கிதைச்சொன்னா லவன்
ஜாக்கிறதைபட்டு வேறொருபாயத்தினால் பொல்லாங்கு தேடுவான்
ஆகையாலிதையவனுடன் சொல்லாதிருப்பதே யோக்கியமேனென்
றால் ராசாவின்மந்திராலோசனை ரகசியமாகவிருக்கவேண்டுமென இ
தைக்கேட்டு மறுபடிசிங்கம் அந்தசஞ்சீவகன் விரோதப்பட் டென்
னசெய்ய மாட்டுவானவன் சாமர்த்திய மெவ்வளவென்று சொல்ல
றியவனைநாமறியமாட்டோம் அவன்பராக்கிரமுஞ் சுபாவமுநமக்
கெப்படித்தெரியும் ஒருவன்குணத்தை யறியாமற் சேர்க்க லாகாது
சேர்த்தாலொரு சீலைப்பேன் மூட்டுப்பூச்சியைச்சேர்த்து நாசமடை
ந்தாற்போலாகுமென சிங்கம் அதெப்படிச் சொல்லுமென தமனக
ன்சொல்லுகிறது.

ஒருராசாவின் பஞ்சணையின் மந்தவிசர்ப்பணியென்று மொருசீ
லைப்பேன் நெடுநாளாகவாசம்பண்ணிக்கொண்டிருக்கையி லொருநா
ளிதன்வீட்டுக்கு டிண்டிபனென்று மூட்டுப்பூச்சிவந்தது அதைப்பா
ர்த்துச்சீலைப்பேன் அப்பாநீபொல்லாதவன் முட்களைப்போன்ற பற்
களினாலே தூங்குதற்குமுன்னமே துடுக்காய்கடிப்பாய் நீசமயந் தெ
ரியாதவனாதலால் ராஜசயனத்தி லிருக்கத்தக்கவனல்ல இவ்விடம்
விட்டோடிப்போவென்று கடுகடுத்துச்சொல்ல மூடனானப்படிச்செ
ய்யவில்லை நீசொன்னபடியே கேட்பேனென்று காலில்விழுந்து பி
ரார்த்திக்க சீலைப்பேன் மனதிரங்கி நல்லது நீவெடுக்கென்று கடிய

மல்நித்திரைசெய்யப்பார்த்து பெற்றெனக்கடித்துக் கொஞ்ச ரத்தங்
குடித்திருஎன்றுசொல்ல அப்போதந்தமூட்டுப்பூச்சிநல்லதென்றிரு
ந்து பிரகாராசாவிழித்திருக்கும்போதே சுறுக்கென்றுகடிக்க ராஜன்
றிடுக்கெனவெழுந்திருந்தென்னமோ கடித்ததென்று சோதனைக்கா
ருடனேசொல்ல அவர்கள் விளக்குக்கொண்டு சோதிக்க முகடுசீக்கி
ரமாய் கட்டிற்சந்தி லொளிந்துங் கொண்டது பதற்கிடங் கொடுத்த
சீலைப்பேனகப்பட்டது நீயல்லவா வெங்களிராஜனைக் கடித்தா யென்
று நசுக்கிகொன்றார்கள் ஐயோ வகைதெரியாமலிருந்தது ஆகையா
லொருவன்குணத்தை தெரிகிறதற்கு முன்னே யவனுடனே சகவா
சம் பண்ணலாகாதெனக்கேட்டுச் சிங்கம் அந்த சஞ்சீவகனுடைய
துஷ்டசுபாவமின்ன எப்படியென்றமக்குத்தெரிந்ததப்போது நிஜ
மென்றுசொல்ல தமனகன் அந்தவெருது உம்மைக்கொல்ல நினைத்
துதன்கொம்புகளை முன்னிட்டுக்கொண்டு உம்முடையசந்நிதியில் வ
ரும்போது தங்களுக்குத் தெரியவருமென்று சொல்லிவிட்டு எருதி
னிடத்திற்குப்போயங்கே தன்மனதில் மிகவும் விசனமிருக்கிறதாக
த்தோற்றுவித்தது யப்போதுசஞ்சீவன் மித்திரா சுகமா வென்றுகே
ட்க தமனகன் சேவகனுக்குச்சுகமெங்கே யிருந்துவரும் சம்பத்தும்
விபத்துங் கூடவேயிருக்கின்றன ராசாவுக்குப் பிரியமாயாரிருக்கிறார்
கள் யாசகன் சன்மானத்தை யடைவானு ஆகையா லிந்தக்காலமே
தனக்குமித்திரன்யார் தன்வலி யெவ்வளவென் றெப்போதும் விசா
ரித்துக்கொண்டிருக்கவேண்டுமென இதைக்கேட்டு சஞ்சீவகன் அ
ப்படி என் சொல்லுகிறாயென தமனகன் ராசகாரியத்தி லுண்டாகிய
வஞ்சகத்தை மற்றொருவரோடு சொல்லலாமோ ராசா வறிந்தாற்
சொல்லுவான் ஆனாலு என் னம்பிக்கையாலே சிங்கத்தோடேசினே
கம்பண்ணினதினால் யுனக்குச்சொல்லுகிறேன் அதென்னவென்றால்
அந்தச் சிங்கமுன்னமே மிகவும் கோபமா யுன்னைக்கொன்று தன்னு
டையசேனைக்கெல்லாம் நல்லவிருந்திடநினைக்கிற தென்று சொல்ல
அதைக்கேட்டவுடனே சஞ்சீவகன் வருத்தத்தோடு மாலோசித்து
க்கொண்டிருந்தது தமனகன் வேறே யாலோசனை என்ன யாதொ
ன்றுசம்பவித்ததோ வதற்குதக்கதாக நடக்கவேண்டுமென சஞ்சீவ
கன் நீசொன்னதெல்லாஞ்சரிதான் உலகத்திலுமப்படியே யிருக்கிற
து எப்படிஎன்றால் சாதாரணமாய் ஸ்திரீகள் துர்சனர்களுக்கு வச
மாயிருக்கிறார் ராசாக்கள்துஷ்டர்களைப்பரிபாலிக்கிறார்கள் துஷ்டனு
டனே மிகவுஞ்சினேகித்தா லவன்விபரீதமாக நினைக்கிறான் ஏனென்
றால்குருட்டனுக்கு கண்ணாடியை காண்பித்தாலும் செவிடன் காதிலு
பதேசித்தாலும் அவர்கள் விபரீதமாகவே நினைப்பார்க ளாகையால்

துஷ்டனப்படி விபரீதமாக நினைக்கிறான் எப்படிச்சந்தனமரம் பாம்
போடுகூடியிருக்குமோ எவ்வாறு தாமரைமுட்புள்ளுக்களோடு கூடியிருக்
குமோ வப்படிபெரும்பாலும் ராசாக்கள்துஷ்டர்களாற்சூழப்பட்டி
ருக்கிறார்கள் ஆகையாலிப்படிப்பட்ட பொல்லாங்கு நமக்குநேரிட்ட
தென இதைக்கேட்டுத் தமனக னந்தச்சிங்கத்துவாய்ப்பேச்சு மாத்தி
ரந் தித்திப்பேயல்லாமல் மனமிகவுங் கடோரந்தான் பூர்வப்பிர்மா கட
லைக்கடக்கிறதற்கு கப்பலுண்டாக்கினா னிருட்டைபோக்கடிக்கவிள
க்கைசிருட்டித்தான் யானையையடக்க வங்குசநிருமித்தான் ஆனால்து
ஷ்டர்களுடைய மனதடங்கும்படி யாதொன்றுஞ்செய்யாமற்போனா
னெனவினவ எல்லாங்கேட்டுச் சஞ்சீவகன் பெருமூச்செறிந்துசொ
ல்லுகிறது பெரியபொல்லாங்கெனக்கு நேரிட்டதைத் தப்பித்துக்
கொள்ளவெனக்கு சாமர்த்தியமில்லை எமனுடையகையி லகப் பட்ட
வனெப்படித் தப்பிப்போவான் எப்படியொருகுற்றமில்லாதவொட்
டையை காகமுதலானவைகூடி கொலைசெய்தனவோ எப்படிவஞ்ச
னைபண்ணுகிற துஷ்டர்களொருவனிடத்திற் குற்றமில்லாமலே கொ
லைசெய்கிறார்களென தமனகனதெப்படியண்ணே சொல்லவேண்டுமென
சஞ்சீவகன்சொல்லுகிறது.

ஒருகாட்டில் மதோற்கடனென்கிற வொருசிங்கம்நரியையும்பு
லியையுங்காக்கையையுந் தனக்குமந்திரியாகவைத்துக்கொண் டரசா
ளுகிறநாளில் ஒருநாளந்தக்காட்டில் ஒட்டகமொன்றுவழிதப்பி வரக்
கண்டு மந்திரியாகியகாக்கை நீயாரெனக் கேட்கவந்த ஒட்டகம் நான்
வழிதப்பி வந்து விட்டேனெனச் சொல்ல அதையிட்டுக்கொண்டு
போய் சிங்கத்தினிடத்தில்விட்டு நடந்தகாரியத்தைச்சொல்லவந்தசி
ங்கங்கேட்டு பயப்படாதே நம்முடையமந்திரிகளுடனே நீயுமொரும
ந்திரியாயிருமென் றபயாஸ்தங்கொடுத்து மந்தானகனென்றுபெயரி
ட்டதைதன்னிடத்தில் வைத்துக்கொண்டது இப்படிவெகுகாலஞ்செ
ல்லுகையி லொருநாள் சிங்கத்துக்குச்சரீரம் அசுத்தமா யிருந்தபடியி
னா லம்மூவரையுமழைப்பித்திரைக்கென்று விரைசமபாதிக்கக் கூடா
தாகையால் நீங்கள்போய்எனக்கேதாவ திரைகொண்டுவரவேண்டும
பிறகுநான் தின்று மிகுந்ததைநீங்கள் தின்னலாமென இம்மூன்றுஞ்சி
ங்கத்தின்கட்டளைப்படியந்தக்காட்டிற்போயிரைதேடிப்பார்த்தகப்ப
டாமையா லப்போதவைகளோடுகூடவிருந்தமந்தானகனை தூரத்தி
ற்போம்படி யொலைவேலையிட்டுக் காகமற்றவிருவரையும்பார்த் தின்
றைக்குநாம் மந்தானகனைகொல்லுவோம் புல்லுந்தழையுந்தின்கிறவ
னுநமக்குப்பிரயோசன மென்னவென மற்றிரண்டுஞ்சரிதானாலவ
னுக்கு நம்முடையராசாவபயங்கொடுத்திருக்கிறதினா லவனைநாமெப்

படிக்கொல்லலாங் கூடாதென காகம் ஆனாலுமின்றைக்குசிங்கத்தின்
கையாற்றப்பாமல் மரணமடைவோமேயென்றுற்பசியெடுத்தால்தா
யும்பிள்ளையைவிட்டுவிடுகிறாள் பாம்புதானிட்டமுட்டைகளைக் குடிக்
கிறது ஆகையாற்பசியாற்பீடிக்கப்படுகிறவ னெந்தப்பாதகந்தான்ப
ண்ணமாட்டானிது வுங்களுக்குத் தெரியவில்லையா வென்றுசொல்லி
யுடனேசிங்கத்தண்டைபோய்க்காகஞ்சொல்லுகிறதுசுவாமியின்றை
க்கேதுவுங் கிடைக்கவில்லை என ஆனாலிதற்கென்ன உபாயம் பண்ண
லாமெனச் சிங்கங்கேட்க காகம்தாங்கள் சுவாதீனத்திலே யிருக்கை
யில் வேறேயாலோசிப்பானேன் வெண்ணையைவைத்துக்கொண்டுநெ
ய்தேடலாமாவெனசிங்கம்என்னிடத் தாகாரமெங்கேயிருக்கிறதென
காகம்மந்தானகமென்னு மொட்டையிருக்கின்றதேஎன இதைக்கேட்
டுச்சிங்கம்பூமியைக்கையாற்றொட்டுச் சிவாசிவாவெனக் காதின்மேற்
கையைவைத்து நானவனுக்கபயங்கொடுத்திருக்கையில் நீங்களிப்படி
விபரீதவார்த்தைசொல்லலாமா அடைக்கலம்புகுந்தவர்களைக்கைவிட
லாமா பசுபூமிதானமிவற்றின்றானத்தைக்காட்டிலு மிந்தப்புண்ணிய
மதிகமென்றுசாஸ்திரமிருக்கிறதேஎனக்கேட்டு ஐயாகாகம்என்றொ
ருவிண்ணப்பத்தைகேட்டருளும் ஒருகுளத்துக்காகஒருவனைவிட்டு
விடலாமா ஒருகிராமரட்சணைக்காக ஒருகுடும்பத்தைதுரக்கலாமா ஒ
ருதேச பாலனத்தின்பொருட்டு ஒருகிராமத்தைவிடலாந்தன்னிமித்
தம்பூமியைவிடலாம் ஆகையாலிது தப்பென்றுகிலு மவனைத் தாங்க
ள்கொல்லவேண்டாம் நாங்களே கொல்லுவோம் இல்லாவிட்டா லவ
னேசாவுடன்பட்டு என்னைக்கொல்லுங்களென்பான் அப்போதுநா
ங்கள் கொல்வோமென்று காகஞ்சொல்ல சிங்கஞ்சும்மாவிருந்தது பி
றகுகாகம் அதையேகட்டளையாக நினைத்துக்கொண்டுபோய்மற்றயிர
ண்டையுமிட்டுக்கொண்டு சிங்கத்தின்கிட்டவந்து சுவாமியின்றைக்கு
ஒன்றும் ஆகாரமகப்படவில்லை அதனாலுங்களுக்கு இன்றைக்கு பட்
டினியிருக்கலாச்சுதே அப்படியிராமலென்னைப் பொசிக்கலாமெனநீ
எவ்வளவு உன்னையுண்டதினாலென் பசிதீருமா உன்னுடல்என் கட
வாய்ப்பல்லுக்குப்போதுமாவென்று கேட்க நரியப்படியானால் என்
னைத் தின்னென்றுநிற்க நீயுமப்படிதான் நீயதிகமல்லவென்று மறு
க்க புலி இவ்விருவரிலுநான் பெருத்திருக்கிறதினா லென்னைப் பட்சித்
துப்பசிதீருமெனச் சிங்கம்நீதானெனக்கு எவ்வளவிறை உன்னைபெ
ரிதாகநினைத்துக்கொண் டிருக்கின்றையோ வென்று சொல்ல ஒட்ட
கமிதைப்பார்த்துச் சுவாமிநானல்லாரைக்காட்டிலும் பெருத்திருக்க
வில்லையா சித்தமானாலென்னைக் கொல்லலாமென விதைக்கேட்டவுட
னே புலியும்நரியுமாய் விழுந்து அந்தட்சணமே ஐயா அதைக்கொன்

றெல்லாம் புசித்தன ஆகையாலெங்கேமிகவுங்கீழ்களிருக்குமோ வங்கேசுகமிராது பிராணனுக்கு நாசம்வருமென்றெண்ணகவேண்டும் இவ்விடத்திலுமப்படியேயிருக்கிறது ஆனாற்றுஷ்டர்கையிலகப்பட்டுச் சும்மாவிருக்கிறதை காட்டிலுஞ் சண்டைசெய்வதே யோக்கியம் எனென்றால் சண்டைமுனையிற்செத்தால் சொர்க்கமடைகிறான் சத்துருவை செயித்தால் இராச்சியமடைகிறானதலால் சூரர்களுக்குச் சாவும்பிழைப்புஞ் சமானமென்றது அதைக்கேட்டுத்தமனகன் சொல்கிறது பகைவர்களுடைய பராக்கிரமத்தை தெரியாமலெவன் பகைத்துக்கொள்ளுகிறானே யவன்முத்திரஞ் சிட்டுக்குருவியினா லெப்படியவமானமடைந்ததோ அப்படியவமான மடைவானென அப்போது தம்பி அதெப்படியென்று சஞ்சீவகன்கேட்கத் தமனகன் சொல்லுகின்றது.

சமுத்திரக்கரையி லிரண்டுசிட்டுகளாணும்பெண்ணுமா யொருசெடியின்கீழ் கூடுகட்டிக்கொண்டிருக்கும்போது பெட்டைஆண்பறவையைப்பார்த்துஎங்கேமுட்டையிடலாமென்றுகேட்க ஆணிதுவே நல்லவிடமென்றுசொல்ல பெண் இந்தக்கடற்கரையி லொருவேளையபாயநேரிடுமென ஆண்சிட்டு சமுத்திரத்திற் என்னுடனே பகைத்துக்கொள்ள சாமார்த்தியமில்லையென உனக்குஞ் சமுத்திரத்திற்கும் வெகுதாரதம்மியமிருக்கின்றதே எவன்றன்வலியும் பிறன்வலியும்பார்க்கிறதில்லையோ அவன் விபத்தையடைவான் எவன்பார்க்கிறானோ அவன்சுகமடைவான் மேலுந் தனக்கிதம்பண்ணுகிற மித்திரன்பேச்சைசகேளாத ஆமை வப்படிக்கழியைவிட்டு மரணமடைந்ததோ அப்படியே மரணமடைவாயெனன ஆண் அதெப்படிபெண்ணே சொல்லடியெனப் பெட்டைக்குருவி சொல்லுகிறது.

விகடசங்கடமென்னு மிரண்டன்னமுங் கம்புக்கிரீவனென்னுமாமையும்சினேகமாயொருகுளத்தில்வாழ்ந்துக்கொண்டிருக்கையில் அன்னங்கள்யிப்போதிங்கேமழைபெய்யாமையாற் குளம்வற்றிபோமாகையால்இனிவேறொருகுளத்திற்போய் சேர்வது யோக்கியமென்றுநினைத்தது ஆனாலிதைநம்முடைய சினேகனுக்குஞ்சொல்லவேண்டுமென்றுலோசித்து அப்படியேயதற்கு சொல்லும் போது கம்புக்கிரீவன் நீங்கள் செப்படையினாற் பறந்துபோவீர்கள் நான்வேறோரிடத்திற் கெப்படிவருவேனென விகடசங்கடர்கள் ஆனாலெங்கள்வார்த்தையின் நம்பிக்கைவைத்து ஸ்திரமாயிருப்பாயானால்உன்னையுங்கொண்டுபோகிறோம் கொண்டுபோகையில்வழியிலொன்றும்பேசாமலிருந்தாற்போகக் கூடுமென்றுசொல்லி ஒருகழிகொண்டுவந் தாமையை

ப்பார்த்திந்தக்கழியைப் பல்லினலேபலமாய்கடித்துப்பிடித்துக்கொ
ள்ளு விட்டுவிடாதே நாங்களிருவருமிதை யிருபுறத்திலும் மூக்காற்
கவ்விக்கொண்டு ஆகாசமார்க்கத்திற் போகிறோமென்றுசொல்லி அந்
தகொம்பையிரண்டும் பற்றிக்கொண்டெழும்பி பறந்துபோகையில்இ
தையொரு பட்டணத்துசனங்கள்பார்த்ததிசயித்துநகைத்தெல்லோ
ருமிருக்க ஆயிதென்ன இரண்டுபறவைகளொருகழியைத் தூக்கிக
கொண்டதை யாமையினற்பிடிபிடித்துக்கொண்டதைகொண்டுபோ
கின்றனவென் றிப்படிபேரிரைச்சலிட்டுபேசினர்கள் அதைககேட்டு
கம்புகிரீவ னிந்தவிரைச்ச லெங்கிருந்துண்டாகிறதென்று சொல்வ
தற்கு வாய்திறந்தவுடனே கழியினின்று விடுபட்டுப்பூமிமேல்விழுந்
தது அப்போதங்கேயிருந்த புலாற்றின்பவர்களுடனே கொன்றுதின
ஞர்கள் ஆகையாற்றனக்கிதம பண்ணுகிறவர்கள்பேச்சை யசட்டை
பண்ணலாகாது மேலும்யாதொருகாரிய நேரிடுவதற்குமுன்னே யா
லோசிக்கிறவனும் வருகிறபோதே யாராய்கிறவனும் மிவ்விருவருஞ்
சுகமடைவார்க ளிதைவிட்டியாதொன்றுவரத்தக்கதோ அதுவரட்டு
மென்று யார்சொல்லுகிறனே அவன்வந்தபின் காப்போமென்னு
மீனைப்போல் நாசமடைவான் என சேவல் அதெப்படியென பெட்
டைகேட்டு சொல்லுகின்றது.

ஒருபெரியகுளத்தில்வருமுன்காப்போனென்றும் வருங்காற்கா
ப்பவனென்றும் வந்தபின்காப்பவனென்றும் மூன்றுமீனகளனேகநா
ளாய் வாழ்ந்துக்கொண்டிருக்குநாளி லொருநாள்வலைக்காரர் வந்தி
லே தண்ணீர்கொஞ்சமாயிருக்கிறதாகையால் நாளைவந்திதிலிருக்கிற
மீன்களையெல்லாம் பிடிப்போமென்றுபேசிக்கொண்டதை வருமுன்
காப்பவனகேட்டு தனசினேகரிடத்திற்போய் நாமிவ்விடம் விட்டுச்
சீக்கிரமாகப் புறப்படவேண்டும் இனியிங்கே யொருநிமிஷநேரமும்
இருக்கலாகாதென இதைக்கேட்டு வருங்காற்பவன சொல்லுகிறது
நமக்குவிபத்துவரும்போது பார்த்துக்கொள்ளுவோம் காரியம் நேரி
டும்போது அதற்குத்தக்கதாகப் புத்தியுண்டாகுமெனப் பிறகுவந்த
பினகாப்பவன் றனனிடத்தை விட்டுவிடுகிறதுதான் மூர்க்கத்தனம்
ஏனென்றால் எதுவரத்தக்கதோ அது வரவேவரும யாதொன்றும்
வரத்தகாததோ அதைநாம் வருந்தியழைத்தாலும்வாராது ஆகலால்
நான் வரமாட்டேனென்றுசொல்லி யந்தகுளத்திலேயே யிருந்தது
பிறகு வருமுன்காப்பவன வேறேரிடத்திற்குப்போய்விட்டது மறு
நாளுதயத்திற் செம்படவர்வந்து மீனகளைப் பிடித்தார்கள் அப்
போதிதில்வருங்காற்காப்பவ னகப்பட்டுச்செத்தார்போற்பாசாங்கு

பண்ணிக்கொண்டிருந்தது அதைப்பார்த்து இதுசெய்தவென்றெண்
ணிக்கொண்டு செய்படவனாதுங் குறைபோற்போட்டுவைத்தாலிதற்
குள்ளே யதுவவன் கண்ணுக்குத்தப்பி தண்ணீரிற்போயொளித்துக்
கொண்டது பிறகுவந்தபின் காப்பவன்வலைக்குளகப்பட்டிப்போனதெ
ன்னசெய்யலாமென்றதுயில் தேமோவதைசெயபடவன்கண்டுதடி
யாலடித்துக்கொன்றான் மற்றிரண்டுஞ் சுகமடைந்தன ஆகையா லெ
தையுமாலோசித்துச்செய்யவேண்டுமென்றுசொல்லி பிறகுபுருஷன்
சொற்படியங்கேதானேமுட்டையிட்டது அப்போதுசமுத்திரந்தன்
வல்லமையை அறியாமல் முட்டைகளையடித்துக்கொண்டுபோயிற்று
சிட்டு அதைப்பார்த்து வெகுதுக்கமாய்ச்சேவலுடனே சொல்லுகிற
து சுவாமிதங்களுக்குப்பெரியசங்கடம்வந்தது ஏனெனில் முட்டை
களை சமுத்திரங்கொண்டுபோயிற்று இப்போதென்னசெய்யலாமென
சேவல் நீபயப்படாதே நான் முட்டையைக்கொண்டு வருவேனென்
றிராணியைப் பார்வென்றுசொல்லி எல்லாப்பறவைகளையுங்கூட்டமா
ய்க்கூட்டிக்கொண்டு கருடனைச்சரணமடைந்து கருடனதை விஷ்ணு
வுக்கறிவித்தப்பறவை மிகவும் வருத்தப்படுகிறதாகையா லிதன்முட்
டைகளைக் கொடுப்பிக்கவேண்டுமென விஷ்ணு சமுத்திரத்தைப்பார்
த்திதன்முட்டைகளைச் சீக்கிரமாய்க்கொடுவென்று கட்டளையிட்டவு
டனே சமுத்திரம் முட்டைகளைக்கொண்டுவந்து கொடுத்தது ஆகை
யாற்சத்துருக்களுடைய பராக்கிரமமறியாமற் பகைத்துக் கொள்ள
லாகாது ஆனாலதுவந்தசிங்கத்திற்ககங்காரத்தினால்தெரியவில்லையென
கேட்டு சஞ்சீவகன் தமனைப்பார்த்து நல்லது அந்தச்சிங்கத்தின்சண்
டைக்குறிப்பெப்படியிருக்குஞ்சொல்லென தமனகன் எப்போதவன்
சாதுகளைநெறித்துக்கொண்டு வாலைத்தூக்குவானோவப்போதுகொல்
லநினைத்தானென்றறியவேண்டும் அக்காலத்திலெப்படியோநீயுமவனுக்
குமுன்னேயிருக்கவேண்டுஞ் சுத்தவீரனாகியவுனக்குத்தெரியாதா எ
ல்லாந்தெரிந்தவர்கட்குச் சொல்லலாமோவெனச் சொல்லிவிட்டுதம
னகன்மறுபடி கரடகனிடத்திறபோயிற்று அப்போதுகரடகனென்
னமாச்சுதுசொல்லென தமனகன்காரியமுடிந்தது இருவருடைய சி
னேகத்தின்வாயில்மண்விழுந்ததுஇப்போதுநான்சிங்கத்தின்கோபக்
குறிப்பபடியிருக்குமென்று சஞ்சீவகனுக்குச்சொன்னபடியே செய்
விக்கிறேனென்றுபிங்களனிடத்திற்குப்போ யப்படியேயதைசெய்வி
த்தது பிறகுசஞ்சீவகன்சிங்கமிருக்குமிடத்திற்குவந்துபார்க்கும்போ
துமுன்றனக்குத்தமனகன்சொன்னபடியே யிருக்கக்கண்டுமிகவும்வி
சனமடைந்து பராக்கிரமத்தினாலேயே பிராணனைவிடவேண்டுமென்

